# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ – ஆவணி
2021 – ஆகஸ்ட்




15.08.2021 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில்
தேசிய சிந்தனைக் கழகமும் கல்லூரிக் காட்சி ஊடகத்துறையும் இணைந்து நடத்திய முப்பெரும் விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

பிலவ - ஆவணி

2021 - ஆகஸ்ட் இதழ் - 110

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

## திருநாவுக்கரசு நாயனார்

உறவினுக்(கு) இகற்கு நஞ்ச உணவினுக்கு அமுதி னுக்குப்

பிறவினுக்கு ஒருதன் மைத்தாய் நின்றருள் பெற்றி மேவி

மறவினுக்கு உணர்வி னுக்கு மேற்படு நிலைமை வாய்ந்த

துறவினுக்கு அரசு நாவுக் கரசினைத் தொழுதல் செய்வாம்.

*– கோயிலூர்ப் புராணம்*

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

அந்த அதிகாலை குளிர் நேரத்தில் சுறுசுறுப்பாகத் தன் அறையை விட்டு வெளியே வந்தார் அப்துல்கலாம்.

அவருக்காக வெளியில் காத்திருந்த அதிகாரிகளைப் பார்த்து ஒரு வெள்ளந்திப் புன்னகை.

தமிழ்நாட்டில் உள்ள குன்னூரில் நடைபெற்ற அரசு நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொள்வதற்காக அங்கே வந்திருந்தார் கலாம்.

ஜனாதிபதியாக அவர் இருந்த போது நடந்த சம்பவம் அது.

நான் தயாராக இருக்கிறேன், நிகழ்ச்சிக்கு நாம் புறப்படலாமா? எனச் சிரித்தபடி தன் அருகிலிருந்த அதிகாரிகளிடம் கேட்டார் அப்துல்கலாம்.

அப்போது அவரை நெருங்கி வந்த ஒரு முக்கிய அதிகாரி ஏதோ ஒரு விஷயத்தைக் கலாம் காதருகில் சென்று சொல்ல அதைக் கேள்விப்பட்டவுடன் அவர் முகத்தில் இருந்த புன்னகை மாறிச் சற்றே பதட்டமானார். அருகில் நின்றிருந்த மற்ற அதிகாரிகளைப் பார்த்துச் சற்று இறுகிய முகத்துடன் கேட்டார்: இதை ஏன் முதலிலேயே என்னிடம் சொல்லவில்லை? இதை எதிர்பார்த்திராத அதிகாரிகள் என்ன பதில் சொல்வது எனத் தெரியாமல் ஒருவரை ஒருவர் பார்த்தபடி அமைதியாக நின்றிருந்தார்கள்.

எவ்வளவு முக்கியமான விஷயம் இது என்றார் கலாம்.

அது இதுதான். முன்னாள் இராணுவத் தளபதி ஃபீல்ட் மார்ஷல் மானேக்ஷா உடல்நலம் சரியில்லாமல் குன்னூரில் உள்ள இராணுவ மருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டிருக்கிறாராம். உடல்நிலை சீராக இல்லாத காரணத்தால் படுத்த படுக்கையாக இருக்கிறாராம்.

யார் இந்த மானேக்ஷா எனக் கேட்பவர்களுக்கு..

1971இல்இந்திராகாந்தி ஆட்சிக் காலத்தில் இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே நடந்த போரில் வெறும் 13 நாட்களில் பாகிஸ்தானைத் தோற்கடித்துச் சரணடைய வைத்த மாபெரும் சாதனையைச் செய்த ராணுவ தளபதிதான் இந்த ஃபீல்ட் மார்ஷல் மானெக்ஷா. பல ஆண்டுக் காலமாக இந்திய ராணுவத்தில் சேவைகள் பல செய்து விருதுகள் பல பெற்ற பெருமைக்குரியவர்.

அவர் குன்னூர் ராணுவ மருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டிருக்கிறார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும்தான் பதட்டமாகிப் போனார் கலாம். இப்போதே நான் அந்த மருத்துவமனைக்குச் சென்று உடனடியாக மானெக்ஷாவைப் பார்த்தாக வேண்டும். அதற்குப்பின் நமது நிகழ்ச்சிகளை வைத்துக் கொள்ளலாம்.

ஆடிப் போனார்கள் அதிகாரிகள். ஏனெனில் ஒரு ஜனாதிபதியின் பயணத் திட்டத்தை அவ்வளவு சுலபமாக நினைத்தபடி எல்லாம் மாற்றி விட முடியாது. ஆனால் இதை எப்படி அப்துல்கலாமிடம் எடுத்துச் சொல்வது?

இதற்குள் பொறுமை இழந்த அப்துல்கலாம், தனது வாகனத்தைத் தன் அருகில் வரும்படி சைகை செய்ய, வேறுவழியின்றி அப்துல்கலாம் விருப்பப்படியே அவரை அழைத்துக் கொண்டு மருத்துவமனையை நோக்கி விரைந்தார்கள் அதிகாரிகள்.

மருத்துவமனைக்குள் பரபரப்பாக அப்துல்கலாம் நுழைவதைப் பார்த்ததும் படுக்கையில் படுத்திருந்த மானெக்ஷா திகைத்துப் போனார். தன்னைப் பார்ப்பதற்காகவே இந்திய ஜனாதிபதி அங்கு வந்திருக்கிறார் என்பது தெரிந்ததும் நெஞ்சம் நெகிழ்ந்து போனார். இதை அவர் கொஞ்சம் கூட எதிர் பார்க்கவில்லை. எப்படி இருக்கிறீர்கள்? அன்பான புன்சிரிப்போடு கேட்ட அப்துல்கலாம், ஆதரவோடு மானெக்ஷாவின் அருகில் வந்து அவர் கரங்களைப் பற்றிக் கொண்டார். சுமார் பதினைந்து நிமிடங்கள் இருவரும் மனம் விட்டுப் பேசிக் கொண்டார்கள்.

மகிழ்ச்சி பொங்கி வழியும் முகத்துடன் மானெக்ஷா சொன்னார்: இவ்வளவு தூரம் சிரமம் எடுத்து என்னைப் பார்க்க வந்ததற்கு மிக்க நன்றி. அது என்னுடைய கடமை. சரி உடல் நலனை நன்கு கவனித்துக் கொள்ளுங்கள். நான் போய் வருகிறேன். புறப்படத் தயாரானார் அப்துல்கலாம். அதற்கு முன் ஒரு முக்கியமான கேள்வி. திடீரென, கலாம் இப்படிக் கேட்டவுடன் என்ன என்பது போல் நிமிர்ந்து அவர் முகத்தைப் பார்த்தார் மானெக்ஷா. உங்களுக்கு இங்கு வழங்கப்படும் வசதிகள் எல்லாம் சவுகரியமாக இருக்கிறதா? ஒரு வேளை ஏதாவது மனக் குறைகள் இருந்தால் என்னிடம் சொல்லுங்கள். நான் அதை உடனே சரி செய்து தரச் சொல்கிறேன்.

அப்துல்கலாம் இப்படிக் கேட்டவுடன் மானெக்ஷா முகம் மாறியது.

அதைப் புரிந்து கொண்ட கலாம், சொல்லுங்கள் உங்களுக்கு ஏதோ ஒரு மிகப் பெரும் மனக்குறை இருப்பதை உங்கள் முகம் தெளிவாகக் காட்டுகிறது. எதுவாக இருந்தாலும் தயவுசெய்து அதை என்னிடம் சொல்லுங்கள். மானெக்ஷா கண்கள் கலங்க அப்துல்கலாம் முகத்தையே உற்றுப் பார்த்தார். அதன் பின் குரல் தழுதழுக்க இப்படிச் சொன்னார்: வேறொன்றுமில்லை. நான் எனது உயிரை விட அதிகமாக நேசிக்கும் இந்த நாட்டின் மிக உயர்ந்த பதவியில் இருக்கும் ஜனாதிபதியாகிய நீங்கள் என்னைச் சந்திக்க இங்கே வந்திருக்கிறீர்கள்.

ஆனால்... இந்த நேரத்தில் கம்பீரமாக எழுந்து நின்று உங்களுக்கு சல்யூட் செய்ய வேண்டிய நான், அப்படிச் செய்ய முடியாத நிலையில் இப்படி இங்கு படுத்திருக்கிறேனே. இது ஒன்றுதான் எனக்கு இருக்கும் ஒரே ஒரு மனக்குறை! இப்படிச் சொல்லிவிட்டு வழியும் கண்ணீரைத் துடைக்கக் கூடத் தோன்றாமல் படுத்திருந்தார் மானெக்ஷா.

அருகில் வந்து அவர் கைகளை ஆதரவோடு பற்றிக் கொண்டார் அப்துல்கலாம். ஆனால் அவர் கண்களும் கூட அவரையும் அறியாமல் கண்ணீரால் நிரம்பியிருந்தது.

இருவர் கண்களில் இருந்தும் வழிந்த அந்தக் கண்ணீர் இந்தியத் தாயின் பாதங்களை நனைத்தது.

மேலே சொல்லப்பட்ட நிகழ்ச்சி எனக்கு இணைய வழியில் நண்பர் ஒருவரால் பகிரப்பட்ட செய்தி. இந்த நிகழ்ச்சியில் சம்பந்தப்பட்ட இருவரும் அண்மைக் காலத்தில் வாழ்ந்தவர்கள். நம்மில் பெரும்பாலானவர்கள் பார்த்திருக்கலாம், அறிந்திருக்கலாம், கேட்டிருக்கலாம். இத்தகைய உன்னதமான, மேன்மை பொருந்திய தலைவர்களைக் கண்டது நம் நாடு.

இவர்களுடைய தேசப்பற்று, நேர்மை, நாணயம் பிறருக்கு மரியாதை செலுத்தும் பண்பு, யாவரையும் மதிக்கின்ற பேருள்ளம் அனைத்தும் நாம் அனைவரும் பெற வேண்டிய நற்பண்புகள், பொக்கிஷங்கள், இப்படிப்பட்ட மேன்மையான உண்மையான நிகழ்ச்சிகளை நம்முடைய நண்பர்களுக்கு, மாணவர்களுக்கு எடுத்துக் கூறி அவர்களை நல்ல முறையிலேயே பண்புள்ள மனிதனாக ஒரு அப்துல்கலாமாக, மானெக்ஷாவாக அவர்கள் உயர நீங்கள் அனைவரும் உதவ வேண்டும்.

நம் நாடு பண்பாளர்கள் நிறைந்த புண்ணிய நாடாக வளர வேண்டும். வல்லமையோடு, நல்லவைகள் இணைந்த நாடாக வளர வேண்டும். முயற்சி செய்வோமாக.

***ஆசீர்வாதங்கள்!***

## மகாராஜா துறவு
## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

### நூல்

நூல் தோன்றிய புராண வரலாறு முதற்பாடலில் கூறப்படுகிறது.

**தருக்கிளர் நைமிச ஆரணி யத்தில்**
**தங்கிய முனிவர்கள் சூதன்**
**வரப்பணிந்து ஏத்திக் கதைகள்பற் பலவா**
**வகுத்துரைத் தனைமகா ராசன்**
**திருக்கதை எங்கட்கு உரைத்திலை அதுநீ**
**செப்புஎனச் சுருதியில் சொல்லும்**
**சுருக்கமில் காதை இதுஎனத் தொகுத்துத்**
**தோம்அறக் கேண்மின்என்று உரைக்கும்.**

1. நைமி சாரண்ய வனத்தில் தவம் செய்து கொண்டிருந்த பல தவயோகிகள் கூடி, தத்துவ விசாரம் செய்து கொண்டிருந்த காலத்தில் சூதமாமுனிவர் அவர்களை நோக்கி வரக் கண்டு அனைவரும் மகிழ்ந்து போற்றி வணங்கினார்கள். பலப்பல சாத்திரங்களைக் கற்று, விசாரித்து ஸ்திரமான ஞானமா முனிவரைக் கண்டதும், முன்பு எங்களுக்குப் பரம்பொருளைப் பற்றிப் பலவிதமான செய்திகளை, வரலாறுகளைக் கூறினீர்கள். ஆனால் மஹாராஜனுடைய மகோன்னத வரலாற்றை எடுத்துக் கூறவில்லை. இப்பொழுது கூறுங்கள் என்று அடிபணிந்து வணங்கினார்கள். சூதமாமுனியும் மஹாராஜனுடைய கதை வேதத்தில் கூறப்பட்டுள்ள வரலாறு ஆகும். மிகவும் விரிவானது அதனைச் சுருக்கமாக உங்களுக்கு விவரிக்கிறேன் என்று கூறத் தொடங்கினார்.

நைமி சாரண்யம் :
நைமி = சக்கரம்
ஆரண்யம் = காடு

நைமி சாரண்யம் என்னும் ஸ்தலம், இமயமலைக்குப் பக்கத்தில் உள்ள வனம். அதிலே காலம் காலமாக முனிவர்கள் தவம் செய்து வந்தார்கள். முன்னொரு காலத்தில், அரக்கர்களாலும்,

மிருகங்களாலும் தங்களுடைய தவம் தடைப்படுவதைத் தடுப்பதற்காக முனிவர்கள் கூட்டமாக, வேதங்களுக்கு நாயகனான பிரம்மாவை அடைந்து எங்களுக்கு அமைதியாகத் தவத்தைத் தொடர்வதற்கு ஏற்ற ஒரு இடத்தைக் காண்பித்து அருள வேண்டும் என்று வேண்டினார்கள். உடன் பிரம்மா, தன் கையிலிருந்த தர்ப்பையை வளைத்துச் சக்கரமாக்கி உருட்டி விட்டார். இந்தச் சக்கரம் எந்த இடத்தில் நிற்கிறதோ அந்த இடம் உங்கள் அனைவருக்கும் தவம் செய்யத் தகுந்த இடமாக அமையும் என்று சொல்லி அனுப்பி வைத்தார். அந்தச் சக்கரம் நின்ற இடம் நைமி சாரண்யம் என்று பெயர் பெற்றது.

**2. குழைத்ததண் சினைத்தேம் மாவின்ஒண் கனித்தேன்**
**குலவிய பலவின் நல்பலம்தேன்**
**தழைத்திடு கதலிப் பழம்உகுத் திடுதேன்**
**தாம்திரண்டு இலஞ்சியில் ததும்பி**
**விழுத்தகு வயலில் பாய்தர விளையும்**
**மிகுகரு நாடதே சந்தான்**
**இழைத்தநல் தவத்தால் உயிர்எலாம் புரந்து**
**அங்கிருந்து அரசாளும்ஓர் குரிசில்.**

கர்நாடக தேசத்தில் குளிர்ச்சி பொருந்திய கிளைகளையும் கனிகளையும் வண்டுகள் உண்டு மகிழத்தக்க மலர்களையும் உடைய மரங்களை நிறையக் கொண்ட வளங்கள் மிகுந்த நாடு, பலா வாழை மா மரங்களிலிருந்து வழிகின்ற தேன் குளத்தில் பாய்ந்து நிறைந்து ததும்பி வழிந்து வளம் மிக்க வயல்களில் பாய்ந்தது. அதனால் வயல்களில் பயிர்கள் செழிப்பாக வளர்ந்ததனால் வளம் மிக்கது ஆனது கர்நாடக தேசம். அத்தேசம் செய்த தவத்தாலும் புண்ணியத்தாலும் ஒப்பில்லாத வேந்தன் நீதிநெறி தவறாது அருளாட்சி செய்து வந்தான்.

**3. மஞ்சுஅமர் இஞ்சிசூழ் மாபுரத்து இருந்து**
**எஞ்சல்இல் எண்திசை இறைவர் தாள்தொழத்**
**தஞ்சம் என்று அடைந்தவர் தம்மைக் காத்துஇகல்**
**வஞ்சகர்க் காய்மகா ராச மன்னனே.**

மேகங்களைத் தொடும் வான் உயரக்கோட்டைகள் நிறைந்திருந்த மாபுரம் என்னும் நகரத்திற்கு எண் திசைகளிலிருந்து சிற்றரசர்களும் வந்து மன்னரை வணங்கித் தஞ்சம் என்று அவர் பாதங்களை வணங்கி நீயே துணை என்று சரணடைந்தவர்களைக் காப்பதும் அருள்வதும் அவர்தம் பகைவர்களான வஞ்சகர்களைத் தன்மத்து ஒடுக்கும் அக்கர்நாடக வேந்தன், மன்னர்க்கு மன்னராவார்.

**4. தருநிழல் அரசு வைகும்**
**சதமகன் திருவின் மிக்கான்**
**உருவினில் மதனின் மிக்கான்**
**உலகத்தினின் ஞிபலத்த தோளான்**
**செருவினில் அரிஏறு அன்னான்**
**தேனொடு மிறும் பாட**
**முருகுஉடைந்து ஒழுகும் தாரான்**
**மூவுலகம் அளிக்கும் வேலான்.**

கற்பக விருட்சத்தின் கீழ் அமர்ந்து, அரசாளும் பாக்கியம் பெற்ற தேவேந்திரனைக் காட்டிலும், செல்வத்தில் மிக்கவன். வடிவழகில் மன்மதனை விட மேன்மையானவன். மலை போன்ற விரிந்த திடமான தோள் கொண்டவன். பகைவர்கள் தோள்களைப் போர்க் களத்தில் வீழ்த்தும் ஆண் சிங்கம் போல், தீரத்தில் மிக்கவன். மகரந்தமும் மணமும் மிக்க மலர்மாலைகளை அணிந்தவன். மூவுலகங்களையும் காப்பாற்றத் தக்க வீரமுடையவன்; கற்பக விருட்சம், சங்க நிதி, பதும நிதி மூன்றும் தேவேந்திரனுக்கு உரியவை. அவை மூன்றும் வேண்டியவர்க்கு வேண்டியவற்றை அளிக்கும் சக்தி படைத்தவை.

**5. அரசர்வந்து இடுதிரை அளக்கும் முன்றிலான்**
**முரசுகள் அனுதினம் முழங்கும் மன்றலான்**
**கரைபொரு திரைஎறி கடல்அம் தானையான்**
**அருவரை மார்பினான் யாளி மொய்ம்பினான்.**

சிற்றரசர்கள் வந்து திறை (கப்பம் கட்டும்) அளிக்கும் பொருள்களைச் சேகரிப்பதற்கென்று பரந்து விரிந்த முற்றங்களைக் கொண்டவன். நாள்தோறும் மங்கள வாத்தியங்கள் முழங்க, மங்கள காரியங்கள்

நடந்து கொண்டேயிருக்கும் செல்வச் செழிப்பு மிக்க வேந்தர். அலை தெறிக்கும் விரிகடல் போல் பெரும் படைகளைக் கொண்டவன். யாழி போன்ற வலிமை மிக்கவன்.

**6. அரசர்தம் முடிஉழுது அவிரும் தாளினான்**
**எரிதவழ் திகிரியை ஏந்தும் தோளினான்**
**மருவளர் வலியினை மாற்றும் வாளினான்**
**தருநிதிக் கொடையினான் தருக்கும் நாளினே.**

சிற்றரசர்கள் பாதம் பணிவதனால் அவர்கள் மணிமுடிகள் ஏற்படுத்திய தழும்புகளாலே ஒளிர்கின்ற அழகிய பாதங்களைக் கொண்டவன். தீ உமிழும் சக்கரத்தைத் தாங்கும் தோள்களை உடையவன். மாற்றார் வீரத்தை நொடியில் அடக்கும் வாளையுடையவன். கற்பக விருட்சத்தைப் போல் கேட்பதை எல்லாம் தருகின்ற கொடை வள்ளல். இவ்வாறு தர்ம முறைப்படி அருளாட்சி செய்து வருகின்ற காலத்தில் ஒருநாள்.

**7. கவரியோடு ஆல வட்டம்**
**காரிகை யார்கள் வீசப்**
**பவளவாய் அரம்பை அன்னார்**
**பாகடை உதவ முத்தத்**
**தவளவாள் நகையார் கீதம்**
**தனிநடம் செய்ய நின்று**
**குவலய மன்னர் போற்றக்**
**குரைகடல் தானை சூழ.**

அழகிய மாதர்கள், கவரி வீசி நிற்க, ஆலவட்டம். பிடித்துத் தூக்கி நிற்க, தேவலோக மாதர்களை ஒத்த செம்பவள இதழ்களை உடைய பெண்கள் வெற்றிலை பாக்கு மடித்துக் கொடுக்க வேந்தன் அழகான தங்கச் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தான். சபா மண்டபத்தில் ஒரு புறம் முத்துப் பற்களை உடைய கன்னியர் கீதம்பாட மறுபுறம் நடனம் ஆட, அரசன் தன்னுடைய கடல் போன்ற விஸ்தாரமான படைகள் சூழ்ந்திருக்கக் கம்பீரமாகச் சிம்மாசனத்தில் வீற்றிருந்தான்.

**8. இந்திரன் ஆல யம்போல்**
**இலங்கிய மண்ட பத்தில்**
**சுந்தர மிருக ராசன்**
**சுமந்தபூ அணையின் மீது**
**வந்துஇருந்து அவனி தன்னை**
**மனுநெறி முறையில் காத்தே**
**அந்தம்இல் போகம் துய்த்து அங்கு**
**இருந்திடும் அரசர் கோமான்.**

தேவலோக மன்னன் இந்திரனுடைய அரசவை போல ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற சபா மண்டபத்திலே சிம்மாசனத்தில் பஞ்சணைமேல் அமர்ந்திருந்தான். இவ்வாறாக வேத நெறிமுறைப் படி மக்களைக் காத்து நல்லாட்சி செய்து சகல யோகங்களையும் ஆண்டு அனுபவித்து வாழ்ந்து வந்தான்.

**9. தூம்புடை பிறைஎ யிற்றுத்**
**துத்திஈ ராயி ரம்தோள்**
**பாம்பினால் பரிக்கல் உற்ற**
**பாரினைப் பரிக்கப் பின்னர்**
**மேம்படு புதல்வர் நம்தம்**
**வீறுடை வயிற்றில் இல்என்று**
**தேம்படு தெரியல் மார்பன்**
**சிந்தைஆ குலங்கள் உற்றான்.**

அவ்வாறு நல்லாட்சி புரிந்து வந்த வண்டுகள் மொய்க்கும் மலர்களால் தொடுத்த மாலைகளை அணிந்த வேந்தன் மனத்திலே ஓர் கவலை உதித்தது. பிறைமதி போன்ற பற்கள் நடுவிலே துளைகளிலே நஞ்சை உடைய ஆதிசேசனால் தாங்கப் படுகின்ற இந்தப் பூமியை எனக்குப் பின்னர் தொடர்ந்து காப்பாற்றி நல்லாட்சி புரிய எனக்கொரு புதல்வன் இல்லையே என்று மனம் வருந்திக் கவலைப்பட்டான்.

**10. கங்கையே முதலா மிக்க**
**கடவுள்மா நதியில் தோய்ந்தும்**
**பங்கயாச னன்மால் திங்கள்**

**பவளவார் சடையான் தன்னை**
**அங்கையால் பூசை செய்தும்**
**அதிதிகட்கு அளித்தும் தீயில்**
**பொங்கும்ஆ குதிகள் ஈந்தும்**
**பூவலம் வந்தும் தேவர்.**

உடன் தோச பரிகாரங்கள் செய்தாவது புதல்வனைப் பெற வேண்டும் என்று எண்ணினார். கங்கை முதலான அனைத்துப் புண்ணிய தீர்த்தங்களிலும் தீர்த்தமாடினார். தாமரை மேல் அமர்ந்திருக்கும் பிரம்மன் திருமால் பிறை நிலவை முடியில் அணிந்திருக்கும் சிவன் ஆகிய தெய்வங்களுக்குத் தன்னுடைய கரங்களால் பூத்தொடுத்து பூஜை செய்தார். அதிதிகளுக்கும் துறவிகளுக்கும் உணவு முதல் வேண்டிய அனைத்தும் வழங்கினார். புத்திர காமேஷ்டி யாகம் உட்பட அனைத்து யாகங்களையும் செய்து தேவர்களுக்கு விருப்பமான ஆகுதிகள் அளித்து வேண்டிக் கொண்டார். புண்ணிய திருத்தலங்களுக்குச் சென்று தெய்வங்களை வணங்கினார்.

## பரமஹம்சர் மொழிந்த உருவகக் கதைகள்

**தருபவர் : பேராசிரியர். மு.பழனி இராகுலதாசன்**

**44**

ஓர் ஊசி மண்ணால் பூசப்பட்டிருந்தால் காந்தம் அதனை இழுத்துக் கொள்ளாது; அந்த மண்ணைக் கழுவிவிட்டால், காந்தம் ஊசியைத் தன்பக்கம் இழுத்துக் கொள்ளும்; அதுபோல், நமது மன அழுக்கைக் கண்ணீரால் கழுவிவிட வேண்டும்; அப்போது காந்தம் என்கிற இறைவன் நம்மைத் தன்பால் ஈர்த்துக் கொள்கிறான்.

**45**

ஒரு நாள் ஒரு குளத்தில் ஒரு நிகழ்ச்சியைப் பார்த்தேன்; குளத்தில் தண்ணீர் அள்ளிக்கொள்ள வந்த ஓர் எளிய மனிதன், தண்ணீரின் மேல் படிந்து கிடந்த பாசியை மிக இயல்பாகத் தள்ளித்தள்ளி ஒதுக்கிவிட்டுத் தனக்குத் தேவையான தண்ணீரைத் தனது பாத்திரத்தில் கொண்டான்; இடை இடையே, அவன் தன் உள்ளங்கையில் தண்ணீரை எடுத்துச்

சோதித்தும் பார்த்துக் கொண்டான்; நீரை மூடிக் கொண்டிருக்கும் பாசியை ஒதுக்கி, ஒதுக்கித் தண்ணீரைக் கண்டு கொள்வது போல், ஏதேனும் ஒரு கருமம் செய்தே ஈசனது தரிசனம் பெற முடியும்.

46

எங்கள் ஊர்ப்பக்கத்தில் விவசாயிகள் தங்கள் நெல் வயல்களுக்கு நீர் கொண்டு போவதைப் பார்த்திருக்கிறேன்; வயல்களுக்கு வெளியே தண்ணீர் ஒழுகிப் போவதைத் தவிர்க்க, வயல்களின் நான்கு பக்கங்களிலும் தணிவாக வரப்புக்கள் அமைத்திருப்பார்கள். மண்ணால் ஆன இந்த வரப்புகளில் சில இடங்களில் துவாரங்கள் ஏற்பட்டுவிடும்; துவாரங்கள் வழியே தண்ணீர் வெளியே ஓடிவிடுவது உண்டு. மனிதனுடைய வாழ்க்கையில் ஆசைகளாகிய துவாரங்கள் அமைந்துவிடல் ஆகாது; இத்தகைய ஆசைகளாகிய துவாரங்கள் நம்மிடம் இல்லையாயின், மனம் இயல்பாகவே கடவுளைப் பார்த்து மேல் நோக்குக் கொள்ளும்.

47

ஒரு முறை பரமஹம்சர் பிரம்ம சமாஜ விழாவுக்கு அழைக்கப்பட்டிருந்தார்; விழாவுக்காக வரும் போது, சாதாரணமான உடையோடு வராமல், ஒரு சால்வை முழுதும் உடம்பைப் போர்த்திக் கொண்டு இருப்பது போல் வரவேண்டும் என்றும் சொன்னார்கள்; அப்படியெல்லாம் என்னால் ஒரு பாபுவாக, அதாவது ஒரு பிரபுவாக வேடம் தரிக்க இயலாது என்று பரமஹம்சர் மறுத்துவிட்டார்.

48

மரக்கட்டையில் தீ பற்றிக்கொள்ளும் போது, சட, சட என்று சப்தம் கேட்கிறது; ஆனால், எரிந்து சாம்பல் ஆன பிறகு ஒன்றும் கேட்பதில்லை; அப்படித்தான் இந்த மனிதர்களும்; உலகப் பற்றுக்கள் இருக்கின்ற வரை ஞானவிசாரம் செய்து ஆரவாரிக்கின்றனர்; இறை உணர்வு உண்டாகிவிட்டால் எல்லாம் மௌனம் தான்.

49

ஒருவன், ஞானமார்க்கத்தில் தான் நாடுவது இது அல்ல, இது அல்ல என்று விஷயங்களை ஒதுக்கி, ஒதுக்கித் தள்ளுகிறான்; அப்படி அவன் செய்யும் போது, ஒவ்வொரு படியையும் புறக்கணிக்கிறான்;

புறக்கணித்துவிட்டு மாடிக்கு மேலே ஏறுவதுதான் ஞான விசாரம்; மேலே போன பிறகு, மாடியும், அதற்குரிய படிக்கட்டும் ஒரே பொருளில் ஆக்கப்பட்டவை என்பதையும் உணர்கிறான்.

**50**

காமார்ப்புகூரில் ஏழைப் பெண்கள் அவல் விற்பார்கள்; விற்பனைக்காக உரலில் அவல் இடித்து எடுத்து வருவார்கள்; உரலில் அவல் இடிக்கும் போது பல விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டியிருக்கும்; உலக்கை உரலில் இடம் தவறாமல் விழ வேண்டும்ட ஒரு கையால் நெல்லை ஒதுக்கிக் கொண்டிருக்க வேண்டும்; மறுகையால் குழந்தையை மடியில் தாங்கிக் கொண்டு பாலூட்ட வேண்டும்; இதற்கிடையில் வருகின்ற வாடிக்கையாளர்களுடன் பேச்சுக் கொடுக்க வேண்டும்; பேச்சுக் கொடுத்து, ஏற்கனவே தரவேண்டிய பாக்கிப் பணத்தைக் கொடுத்து அவலை எடுத்துப் போங்க என்று சொல்ல வேண்டும்; இதற்குப் பெயர் அப்பியாசயோகம்.

*(தொடரும்...)*

## ஓம் நமோநாராயணாய! 108 திவ்யதேசங்கள்

### 11. திருஆதனூர்

**(அழ.மெய்யம்மை)**

(காப்பியக் கவிஞர் நா.மீனவன் அவர்களின் பேத்தி)

108 திவ்ய தேசங்களுள் பதினொன்றாவது திவ்ய தேசம், திரு ஆதனூர். சோழ நாட்டுத் திருப்பதிகளுள், இது பதினொன்றாவது திருத்தலமாகும். இத்தலம் சுவாமிமலையிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது. திருப்புள்ளம் பூதங்குடியிலிருந்து 1 கி.மீ தொலைவில் உள்ளது. பெருமாளின் நவக்கிரகத் தலங்களில் இது குரு தலமாகும்.

தேவர்கள் அமிர்தம் வேண்டிப் பாற்கடலைக் கடைந்தபோது வெளிவந்த அபூர்வ விஷயங்களில் காமதேனு என்ற பசு முதலாவதாக வெளியில் வந்தது. அதன் பின் திருமகள் வந்தாள். தான் திருமகளுக்கு முன் தோன்றியவள் எனக் காமதேனு கர்வம் கொண்டிருந்தது. இக்கர்வத்தைப் போக்க வேண்டுமென்பதற்காக, ஸ்ரீ நாராயணர், காமதேனுவிடம் ஒரு மரக்காலைக் கொடுத்து, அதனைப் பொருட்களால் நிரப்பும் படி சொன்னார்.

பிறர் நினைப்பதெல்லாம் தரக்கூடிய தமக்கே ஒரு சவாலா? என்றெண்ணி இறுமாந்த காமதேனு, தன்னிடம் உள்ள அனைத்துப் பொருட்களையும் மரக்காலில் இட்டது. இட்டாலும் நிரம்பவில்லை. உடனே பெருமாள், திருமகளை அழைத்து அவ்வாறே நிரப்பச் சொன்னார். திருமகளும், தன் நாயகனை உளமார வேண்டிக்கொண்டு ஒரே ஒரு துளசி இலையை மரக்காலில் இட, அம்மரக்கால் நிரம்பி வழிந்தது.

உண்மையான பக்தியே எல்லா நிறைவுக்கும் காரணம் என்பதைக் காமதேனு உணர்ந்தது. மஹாவிஷ்ணுவிடம் சரணடைய வேண்டுமென்று இத்திருத்தலத்தில் தவமிருந்தது. ஆ வாகிய காமதேனு தன் நிலை உணர்ந்து தவமிருந்த ஊர் ஆ-தன்-ஊர். அதனால் ஆதனூர் ஆயிற்று.

இங்கிருக்கும்

மூலவர் – ஆண்டளக்கும் அய்யன்

உற்சவர் – அழகிய மணவாளர் (ஸ்ரீரங்கநாதர்)

தாயார் – பார்க்கவி, ரங்கநாயகி, கமலவாசினி

விமானம் – ப்ரணவ விமானம்

தலவிருட்சம் – பாடலி, புன்னை

தீர்த்தம் – சூர்ய தீர்த்தம், சந்திர தீர்த்தம்

கோலம் – தலையின் கீழ் மரக்காலும், இடது கரத்தில் ஓலை எழுத்தாணியுடன் கிழக்குத் திசை நோக்கிய பள்ளி கொண்ட திருக்கோலம்.

இத்தலத்தில் காமதேனுவின் மகள் நந்தினிக்கும் சிற்பங்கள் உண்டு.

பெருமாளின் கருவறைக்கு வலது பக்கத்தில் ஆஞ்சநேயரும் இடது பக்கத்தில் யோகநரசிம்மரும் காட்சி தருகிறார்கள். இந்த ஆஞ்சநேயர் தவிர, கோயிலுக்குச் சற்றுத் தொலைவில், தனிச் சந்நிதியில் வீர சுதர்சன ஆஞ்சநேயரையும் ராமர் பாதங்களையும் தரிசிக்கலாம். இலங்கையிலிருந்து அயோத்திக்குச் செல்லும் வழியில் இத்தலத்தின் மகிமையால் ஈர்க்கப்பட்ட ஆஞ்சநேயர், இங்கு தங்கி ராமநாமம்

ஜெபித்து, இத்தலத்தை மேம்பட வைத்தார். அவர் சென்ற பிறகு, அங்கே வந்த ஶ்ரீராமர், என் மனதுக்கினியவன் இங்கு வந்தானா? என்று விசாரித்திருக்கிறார். அனுமன் அங்கே வந்ததையும், ராமநாமம் ஜெபித்ததையும் கேள்விப்பட்ட ராமர், தன் பாதப் பதிவை அங்கே விட்டுச் சென்றாராம்.

ஒரு சமயம், சிவன் பிரம்மாவின் ஒரு தலையைக் கிள்ள, அது கையில் ஒட்டிக் கொண்டது. அதைச் சுட்டெரித்துச் சாம்பலாக்குமாறு சிவன் அக்னி தேவனிடம் சொன்னார். அக்னிதேவனால் அது முடியாமல் போனது மட்டுமன்றி, பிரம்மஹத்தி தோசமும் பிடித்துக் கொண்டது. அத்தோஷம் நீங்க அக்னிபகவான் இத்தலத்தில் கடுந்தவம் புரிந்தார். அக்னிதேவனுக்கு எம்பெருமான் காட்சி தந்து சாபம் போக்கினார்.

இத்தலத்தின் கோபுரத்தில் மஹாவிஷ்ணு சிலை ஒன்று உள்ளது. ஓங்காரோ பகவான் விஷ்ணு என்ற ப்ரமானத்தின் பேரில் பிரணவ விமானத்தில் வாசுதேவன் உள்ளான். இவன் திருவடி தெரிந்து விட்டால், இக்கலியுகம் முடிந்து பிரளயம் உண்டாகிவிடும். இச்சிலை வளர்ந்து தற்பொழுது முழங்கால் வரை தெரிகின்றது.

என் அய்யா, காப்பியக் கவிஞர், நற்றமிழ் நாவலர் கவிஞர்கோ.நா.மீனவனார் திருஆதனூர் குறித்து எழுதிய ஐந்து பாடல்கள் இதோ!

1. தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைத் தழுவிய நற்தோள்களை உடையவன், மகரந்தத்தைத் தேடிச் செல்லும் வண்டினங்கள் பாடுகின்ற பேறைப் பெற்ற ஆதனூர்ப் பதியில் உறைபவன், மைபோன்ற நிறம் கொண்ட மேனியினை உடையவன் நம் பரந்தாமன். அவனின் பாதமலரைப் பணிந்து அவனுடைய அருளைப் பெறச் சொல்லும் முதற்பாடல்:

**போதாரும் திருமகளைப் புல்லியநற் றோளுடையான்**
**தாதாரும் வண்டினங்கள் தான்பாடும் பேறுடைய**
**ஆதனூர்ப் பதியுறைவான் அஞ்சனஞ்சேர் மேனியினான்**
**பாதமலர் தான்பணிவோம் பரந்தாமன் அருள்பெறுவோம்.**

2. இங்கிருக்கும் மூலவர், ஆதனூரை ஆண்டு உலகிற்கே படியளக்கும் அய்யன் ஆவார். ஒரு சமயம் ப்ருகு மகரிஷி வைகுந்தம் சென்று எம்பெருமானையும் தாயாரையும் வழிபட்டார். தாயார் முனிவருக்குப் பூமாலையொன்றைப் பரிசளித்தார். அம்மாலையைத் தனது ஐராவதம் என்ற யானைக்குச் சூட்டினார். அந்த யானை, அம்மாலையைத் துதிக்கையில் சுற்றிக் கீழே போட்டுக் காலால் மிதித்தது. இதனைக் கண்டு கடுஞ்சினம் கொண்ட ப்ருகு முனிவர், இந்திரனைச் சபிக்க, இந்திரன் எல்லாச் செல்வங்களையும் சுகபோகங்களையும் இழந்து, திருமாலிடம் பிராயச்சித்தம் கேட்டு நின்றார். தாயார், இந்திரனை நோக்கி, நான் ப்ருகு மஹரிஷிக்கு **பார்க்கவி** என்ற பெயரில் மகளாகப் பிறக்கிறேன். திருமால் என்னை மணம் செய்விக்க வரும்போது, நீர் அந்தத் தலத்தில் வந்து சேவித்தால், உனது சாபம் தீரும் என அருளினார்.

அவ்வாறே, திருமால் தாயார் பார்க்கவியைத் திருமணம் செய்யும் பொழுது, இத்தலத்தில் இந்திரன் வந்து சேவிக்க, அவனது சாபம் தீர்ந்து இழந்ததைத் திரும்பப் பெற்றான். அதனால் இத்தலத்தில் வீற்றிருக்கும் தாயாருக்கு பார்க்கவி என்றொரு திருநாமம் உண்டு.

திருஆதனூரும் திருவரங்கமும் பலவகைகளில் மிகவும் ஒற்றுமை வாய்ந்த தலங்களாகும். திருவரங்கத்தின் இருபுறமும் காவிரியும் கொள்ளிடமும் ஓடுதல் போன்று இத்தலத்தின் இருபுறமும் காவிரியும் கொள்ளிடமும் ஓடுகிறது. பரமபதத்தில் இருக்கும் மஹாவிஷ்ணுவிற்கு முன்புறம் ஒரே மாதிரியான இரு தூண்கள் இருக்கும். ஜீவன்கள் மேலே செல்லும் போது, இந்தத் தூண்களைத், தழுவிக் கொண்டால் பாவங்களில் இருந்து விடுபட்டு மோட்சம் கிடைக்கும். அது மாதிரி, இணையான இரண்டு தூண்கள் 108 திவ்ய தேசங்களில் திருவரங்கத்திலும், இந்த ஆதனூரிலும் மட்டுமே உண்டு.

இங்கிருக்கும் உற்சவப் பெருமாள் ஸ்ரீரங்கத்தில் இருக்கும் உற்சவர் பெயரால் அழகிய மணவாளப் பெருமாள் என்று அழைக்கப்படுகிறார். அழகிய மணவாளரின் பத்தினி என்பதால் ஸ்ரீரங்கநாயகி என்ற நாமத்தால் தாயார் அழைக்கப்படுகிறார்.

ஆண்டளக்கும் அய்யனை, பார்க்கவித் தாயாரோடு, வேண்டுவார்க்கு அருள்செய்யும் வித்தகனை, காவிரியும் கொள்ளிடமும் பாதங்களை வருட, இப்பாருலகத்தை ஆண்டு கொண்டிருப்பவனை, ஆதனூரில் அமர்ந்தவனைப் போற்றச் சொல்லும் இரண்டாம் பாடல்:

**ஆண்டளக்கும்அய்யன் அருளன்னை பார்க்கவியாள்**
**வேண்டுவார்க் கருள்செய்யும் வித்தகனைக் காவிரியும்**
**தாண்டரிய கொள்ளிடமும் தாள்வருடப் பாருலகம்**
**ஆண்டானை ஆதனூர் அமர்ந்தானைப் போற்றுதுமே.**

3. உழைப்புக்கேற்ற ஊதியம் என்பதைப் பரம்பொருளே நிர்ணயித்த சம்பவம் நிகழ்ந்த தலம், இந்தத் திருஆதனூர். திருமங்கையாழ்வார் ஸ்ரீரங்கத்தில் மதில் சுவர் எழுப்பும் சேவையில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டிருந்தார். ஒரு கட்டத்தில் பணத்தட்டுப்பாடு ஏற்பட்டு அந்தப் பணி தொய்வடைந்தது. மனம் வருந்திய ஆழ்வார். பெருமாளை வேண்ட, பெருமாளோ ஆழ்வாரை, கொள்ளிடக்கரைக்கு வந்து பணத்தைப் பெற்றுக் கொள்ளுமாறு கூறினார்.

கொள்ளிடக்கரைக்கு ஓடோடிச் சென்றார் ஆழ்வார். தலைப்பாகை அணிந்து, ஒரு கையில் மரக்காலோடும், மற்றொரு கையில் ஓலை மற்றும் எழுத்தாணியோடும் காட்சி கொடுத்த வணிகரைப் பார்த்து ஏமாற்றமடைந்தார். பொருளோடு வருவேன் என்றவர் வெற்று மரக்காலுடன் வந்து நிற்கிறாரே, என்று வேதனைப் பட்டார் ஆழ்வார். அதைப் புரிந்து கொண்ட வணிகர், தன்னை ஸ்ரீரங்கத்து அழகிய மணவாளர் அனுப்பி வைத்ததாகக் கூறி, ஆழ்வாரின் சந்தேகத்தைத் தீர்த்தார். கவலைப்படாதே, வெற்று மரக்காலாய் இருந்தாலும், இந்த மரக்காலைக் கையில் ஏந்தியபடி பரந்தாமனை உளமார நினைத்தால், வேண்டிய பொருள் அனைத்தும் இந்த மரக்காலில் நிரம்பும் என்று விளக்கமும் அளித்தார்.

திருமங்கையாழ்வாரோ, அப்படியானால், நீங்களே அம்மரக்காலில் பொருளை நிரப்புங்கள். மதில் கட்ட உழைத்தவர்களுக்கு நான் ஊதியம் தரவேண்டும் என்று அந்த

வணிகரையே செய்யச் சொல்கிறார். வணிகரோ, அம்மரக்காலில் ஆற்று மணலை அள்ளினார். அதிர்ச்சியுற்ற ஆழ்வார், பொன்னை அளக்கச் சொன்னால், நீர் மண்ணை அளக்கின்றீரே? என வினவ, உண்மையாக யார்யார் உழைத்தார்களோ, அவர்களுக்கு மட்டும் இந்த மணல் பொன்னாக மாறி, அவர்கள் கரங்களை நிறைக்கும். ஆனால், பணி செய்ததாகப் போக்குக்காட்டி ஏமாற்றியவர்களுக்கு வெறும் மணல் தான் கிடைக்கும் என்று வணிகர் நிபந்தனை விதித்தார். ஆழ்வாரும் ஒப்புக் கொண்டார்.

பெரும்பாலானோர்க்கு வெறும் மணல் மட்டுமே ஊதியமாகக் கிடைத்தது, இவன் நம்மை ஏமாற்ற நினைக்கிறான். விடக்கூடாது இவனை என்று கோபம் தலைக்கேற வணிகரை நெருங்கினர். வணிகர் தப்பித்து ஓட, ஆழ்வார் தன் குதிரை மீதேறி வணிகரைத் துரத்தினார். அவ்வாறு ஓடிவரும்போது, ஓலைப்பாடி என்ற ஊரில் ஓலையெடுத்து எழுத்தாணியால் மணல் அளந்து கொடுத்த விவரத்திற்குக் கணக்கும் எழுதினார். ஆதனூர் என்ற இத்தலத்திற்கு வந்ததும், வணிகர் சட்டென்று பெருமாளாகித் திருமங்கை மன்னருக்குக் காட்சி கொடுக்கிறார். மரக்கால், ஓலை, எழுத்தாணி சகிதமாக ஆதனூரில் புகுந்த பெருமானை வணங்கச் சொல்லும் மூன்றாம் பாடல்:

**மதில்கட்டும் திருமங்கை மன்னனுக்குப் பொருள்கொடுக்கப்**
**புதிய மரக்காலும் கணக்கெழுதப் புத்தேடும்**
**இதுவென்று காட்டியே இவண்புகுந்த பெருமானைப்**
**பதிசிறந்த ஆதனூர்ப் பகலவனை வணங்குதுமே.**

4. இத்தலத்தில் பரந்தாமன் பஞ்சணையாய்த் தாங்கியிருக்கும் ஆதிசேஷன் திருமேனியில் சங்கும் சக்கரமும் பொறிக்கப்பட்டுள்ளன. ஒரு சமயம், தனிமையை விரும்பி நாராயணன், இப்பகுதிக்கு வந்த போது, அவரை என்றும் பிரியாத ஆதிசேஷன் அவரைக் காணாது உலகெங்கும் தேடித் தேடித் தவித்து இறுதியாக இத்தலத்தில் அவரைக் கண்டுகொண்டான். அவனை மேலும் சோதிப்பதற்காக, பரந்தாமன், நீதான் என்னைத் தாங்கும் ஆதிசேஷன் என்பதற்கு என்ன ஆதாரம்? என்று கேட்டார். உடனே ஆதிசேஷன் பல அடையாளங்களைக் காட்டி,

தன்னை நிருபிக்க, அதுகண்டு அக மகிழ்ந்தான் பரந்தாமன், தானே அவனுக்கு ஆச்சார்யனாக மாறி, அவன் தோள்களில் சங்கு, சக்கர முத்திரைகளைப் பதித்து, அவனுக்கு நிலைத்த அருளை வழங்கினார். செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகளின் கைப்படிந்த தோள்களை உடையவன், கரிய மாமேகத்தைப் போன்றவன், கடலில் இருக்கும் பாம்பைத் தலையணையாய்க் கொண்டவன், இத்தலமான ஆதனூரைத் தேடி வந்து அமர்ந்து எப்போதும் மகிழ்ந்திருப்பவன் இப்பரந்தாமன். அவனுடைய இணையடிகளைப் போற்றச் சொல்லும் நான்காம் பாடல் :

**செப்பனைய மார்பழகி செங்கமலத் திருமடந்தை**
**கைப்படிந்த தோளான் கரியமா முகிலனையான்**
**அப்பிருக்கும் பாம்பணையான் ஆதனூர்ப் பதிதேடி**
**எப்பொழுதும் மகிழ்ந்திருப்பான் இணையடிகள் போற்றுமினே.**

5. சக்கரம், சங்கு, கதை, சார்ங்கம் என்னும் வில்லம்பு, நாந்தகவாள் ஆகிய பஞ்ச ஆயுதங்களுடனும் உலகளந்த பாதங்களையும் உடைய மாலோன், தாமரையில் வீற்றிருக்கும் திருமகளின் மணமகனாய், ஆதனூரில் வீற்றிருக்கின்றான். அவனடியைப் போற்றச் சொல்லும் ஐந்தாம் பாடல் :

**கனல்திகிரி வெண்சங்கம் கதையுடனே சார்ங்கம்**
**பனிபுனல்சூழ் உலகளந்த பாதங்கள் நாந்தகவாள்**
**தனமகளின் மணமகனாய்த் தாமரையாள் நாயகனாய்**
**மனமருவும் ஆதனூர் மாலடியைப் போற்றுதுமே.**

அனைத்து திவ்ய தலங்களுக்கும் இருப்பது போல், இத்தலத்திற்கென்று தனியாக ஒரு பாசுரம் இல்லையென்றாலும், திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமடலில் திருமால் எழுந்தருளியுள்ள இடங்களையும் அவற்றின் சிறப்புகளையும் கூறும் பொழுது ஆதனூர் குறித்து ஒருவரியில் மங்களாசாசனம் செய்துள்ளமையால், இத்தலம் திவ்யதேசம் என்னும் பெருமையைப் பெற்றது.

ஊரகத்தில் வாழும் திருவிக்கிரமனை, திருஅட்டப்புயகரத்தில் வீற்றிருக்கும் எனது காளையை, என் மனதைக் கொள்ளை கொண்ட மஹா விஷ்ணுவை, தேவர்களின் தலைவனை, திருமூழிக்களத்தின் தீபம் போன்றவனை, திருஆதனூரை ஆண்டு, உலகிற்கே படியளக்கும் அய்யனை, இங்கெல்லாம் சென்று தரிசித்து, கைகூப்பிச் சேவித்து, என் நிலைமையை உள்ளபடியே தெரிவித்தால், எம்பெருமான் தனது அருளையும் மார்போடு அணையும் பாக்கியத்தையும் தருவானே! என ஆதனூர் அய்யனை ஒற்றை வரியில் மங்களாசாசனம் செய்துள்ள திருமங்கையாழ்வாரின் பெரிய திருமடலில் வரும் சில வரிகள்:

..............................................ஊரகத்துள்
அன்னவனை அட்டப் புயகரத்தெம் ஆனேற்றை,
என்னை மனங்கவர்ந்த ஈசனை – வானவர்தம்
முன்னவனை மூழிக் களத்து விளக்கினை
அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் அய்யனை,
...................................கண்டாங்குக் கைதொழுது
என்னிலைமை யெல்லாம் அறிவித்தால் எம்பெருமான்,
தன்னருளும் ஆகமும் தருவானே........................

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### அமைச்சு

(அமைச்சனது தன்மை)

**1. கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு.**

கருவியும் – வினை செய்வதற்கு வேண்டிய கருவியும்; காலமும் – அதற்கு ஏற்ற காலமும்; செய்கையும் – செய்யும் முறையும்; செய்யும் அருவினையும் – செய்ய உள்ள அரிய வினையும்; மாண்டது – என்ற அவற்றின் நுட்பம் அறிந்தவனே; அமைச்சு – அமைச்சன் ஆவான்.

செய்ய உள்ள வினை செய்வதற்கு வேண்டிய கருவியும் அதற்கு ஏற்ற காலமும் செய்யும் முறையும் அரிய வினையும் என்ற அவற்றின் நுட்பம் அறிந்தவனே அமைச்சன் ஆவான்.

கருவியும்.... வினையும் – உம் எண்ணும்மை

**2. வன்கண் குடிகாத்தல் கற்றுஅறிதல் ஆள்வினையோடு**
**ஐந்துடன் மாண்டது அமைச்சு.**

வன்கண் – வலிமை; குடிகாத்தல் – குடிமக்களைக் காத்தல்; கற்று அறிதல் – நூல்களைக் கற்றலும் நல்லன தீயன அறிதலும்; ஆள்வினையோடு – முயற்சியும் என்பவற்றோடு; ஐந்துடன் – ஐந்து நிலைகளிலும்; மாண்டது – நுட்பம் அறிந்தவனே; அமைச்சு – அமைச்சன் ஆவான்.

வலிமை, குடிமக்களைக் காத்தல், நூல்களைக் கற்றல், நல்லன தீயன அறிதல், முயற்சி என்பவற்றோடு ஐந்து நிலைகளிலும் நுட்பம் அறிந்தவனே அமைச்சன் ஆவான்.

ஓடு – எண்ணிடைச் சொல்

**3. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்**
**பொருத்தலும் வல்லது அமைச்சு.**

பிரித்தலும் – வேண்டாதாரைப் பிரித்தலும்; பேணிக் கொளலும் – தமக்குரியாரைப் பிரிந்து விடாமல் பாதுகாத்துக் கொள்ளுதலும்; பிரிந்தார்ப் பொருத்தலும் – முன்பு பிரிந்தாரைத் தம்மோடு சேர்த்துக் கொள்ளுதலும்; வல்லது அமைச்சு – செய்ய வல்லவனே அமைச்சன் ஆவான்.

வேண்டாதாரைப் பிரித்தலும் தமக்கு உரியாரைப் பிரிந்து விடாமல் பாதுகாத்துக் கொள்ளுதலும் முன்பு பிரிந்தாரைத் தம்மோடு சேர்த்துக் கொள்ளுதலும் ஆகிய செயல்களைச் செய்ய வல்லவனே அமைச்சன் ஆவான்.

உம் – எண்ணும்மை

பிரித்தல், கொளல், பொருத்தல் – தொழிற்பெயர்கள்.

**4. தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு.**

தெரிதலும் – ஆராய்ந்து தெளிதலும்; தேர்ந்து – செயல் தன்மையை நாடி; செயலும் – செய்தலும்; ஒருதலையாச் சொல்லலும் – ஒரு மித்த துணிவோடு சொல்லுதலும்; வல்லது அமைச்சு – வல்லவனே அமைச்சன் ஆவான்.

ஒரு செயலை ஆராய்ந்து தெளிதலும் செயல் தன்மையை நாடிச் செய்தலும் எதைச் செய்ய வேண்டும் என்று ஒரு மித்த துணிவோடு சொல்லுதலும் வல்லவனே அமைச்சன் ஆவான்.

தெரிதலும் – உம் எண்ணும்மை

தெரிதல், செயல், சொல்லல் – தொழிற்பெயர்கள்.

**5. அறன்அறிந்து ஆன்றுஅமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்
திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை.**

அறன் அறிந்து – அறச் செயல்களை நன்கு அறிந்து; ஆன்று அமைந்த – நிறைந்து அமைந்த; சொல்லான் – சொல்லினை உடையவனாய்; எஞ்ஞான்றும் – எக்காலத்திலும்; திறன்அறிந்தான் – வினைகளின் தன்மைகளை அறிந்தவன்; தேர்ச்சித் துணை – மன்னனால் தேர்ந்த சிறந்த துணையாவான்.

அறச் செயல்களை நன்கு அறிந்து நிறைந்து அமைந்த சொல்லினை உடையவனாய் எக்காலத்திலும் வினைகளின் தன்மைகளை அறிந்தவன் மன்னனால் தேர்ந்த சிறந்த துணையாவான்.

அறிந்து – வினைஎச்சம்

சொல்லான் – வினையால் அணையும் பெயர்

அறிந்தான் – வினையால் அணையும் பெயர்

**6. மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை.**

மதிநுட்பம் – அறிவு நுட்பத்தை; நூலோடு – நூலைக் கற்ற அறிவோடு; உடையார்க்கு – உடையவர்களுக்கு; அதிநுட்பம் – மிகநுட்பமாக உள்ளவை; யாவுள முன்நிற்பவை – முன்னால் வந்து எதிர்நிற்பவை எவை உள்ளன.

அறிவு நுட்பமும் நூலைக் கற்ற அறிவும் உடையவர்களுக்கு முன்னால் வந்து எதிர்நிற்கும் மிக நுட்பம் உள்ளவை எவை உள்ளன. ஒன்றும் இல்லை என்பதாம்.

**7. செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்.**

செயற்கை – வினை செய்யும் திறங்களை; அறிந்தக் கடைத்தும் – அறிந்திருந்தாலும்; உலகத்து இயற்கை – உலக இயல்பினை; அறிந்து செயல் – அறிந்து செய்ய வேண்டும்.

வினை செய்யும் திறங்களை அறிந்திருந்தாலும் உலக இயல்பினை அறிந்து செய்ய வேண்டும்.

செயல் – வியங்கோள்.

**8. அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்.**

அறி கொன்று – அறியச் சொல்லியவர்களின் அறிவையும் கெடுத்து; அறியான் எனினும் – தான் அறியாதவனாய் இருந்தாலும்; உறுதி – நன்மை பயப்பனவற்றை; உழையிருந்தான் – பக்கத்தில் உள்ள அமைச்சன்; கூறல் கடன் – கூறுதல் கடமை ஆகும்.

அறியச் சொல்லியவர்களின் அறிவையும் கெடுத்துத் தானும் அறியாதவனாய் மன்னன் இருந்தாலும் அவனுக்கு நன்மை பயப்பனவற்றைக் கூறுதல் பக்கத்தில் உள்ள அமைச்சனின் கடமை ஆகும்.

அறி – தொழிற்பெயர், கொன்று – வினைஎச்சம்; கூறல் – தொழிற்பெயர்.

**9. பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்ஓர்
எழுபது கோடி உறும்.**

பழுது எண்ணும் – மன்னனுக்குத் தீங்கு நினைக்கும்; மந்திரியின் – அமைச்சன் ஒருவனில்; பக்கத்துள் – பக்கத்தில்; தெவ் – பகை; ஓர் எழுபது கோடி – எழுபது கோடி; உறும் – உறுவர்.

பக்கத்திலிருந்து மன்னனுக்குத் தீங்கு நினைக்கும் அமைச்சன் ஒருவனில் ஓர் எழுபது கோடிப் பகைவர் பொருந்துவர்.

**10. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்**
**திறப்பாடு இலாஅ தவர்.**

முறைப்படச் சூழ்ந்து – செய்யப்படும் வினைகளை முறையாக எண்ணிப் பார்த்தும்; முடிவிலவே செய்வர் – அவற்றை முடிவு அடையா வண்ணம் செய்துவைப்பர்; திறப்பாடு – அவற்றை முடிப்பதற்கு ஏற்ற கூறுகள்; இலாஅதவர் – இல்லாதவர்கள்.

செய்யப்படும் வினைகளை முறையாக எண்ணிப் பார்த்தும் அவற்றை முடிப்பதற்கு ஏற்ற கூறுகள் இல்லாதவர் அவற்றை முடிவு அடையா வண்ணம் செய்து வைப்பர்.

சூழ்ந்து – வினைஎச்சம்
இலாஅ – இசைநிறை அளபெடை

*(தொடரும்...)*

## ஆடிமுன் நின்ற ஆடிப்பாவை

**சித்தாந்த ரத்தினம் பா.அசோக்குமார்**
**மதிப்பியல் தலைவர்,**
**திருப்பாதிரிப்புலியூர் சித்தாந்தச் சைவநெறி மன்றம் கடலூர்.**

பன்னிரு மாதங்களுள் தனிச் சிறப்புடைத்து ஆடி மாதம். ஆடிப் பட்டம், ஆடிப் பெருக்கு, ஆடி அமாவாசை, ஆடிக் கிருத்திகை, ஆடித் தபசு, ஆடிப் பூரம் என அணி வகுத்து வரும் சிறப்புகள் ஆடி மாதத்திற்கு மட்டுமே உண்டு.

மாதங்களில் நான் மார்கழி என்றான் மாதவன். அந்த மாதவனே மனம் விரும்பி மணம் புரிந்து கொண்ட மாதராள் அவதரித்தது ஒரு நள வருடத்தின் பூர நட்சத்திரம் புண்ணியம் உடையது ஆடி மாதமே!

பாண்டிய நாட்டின் திருவில்லிபுத்தூரில் விண்ணகரமாம் திருக்கோவில் நந்தவனத்தில் அன்றலர்ந்த மலர்களைக் கொய்து அழகாக மாலை தொடுத்து வடபத்ரசாயி பெருமாளுக்கு வழங்கும் திருப்பணியிலே தன் வாழ்நாளைக் கழித்து வந்தார் விஷ்ணு சித்தர் என்கிற பெரியாழ்வார். வழக்கம் போல் ஒருநாள் காலை பூப்பறிக்கச் சென்றவர் அங்கு துளசிச் செடிகளின் இடையே ஓர் அழகிய பெண் குழந்தையைக் கண்டார். பின்னாளில் (இறைவன்) கோவையே

மணக்கப் போகிற தையலாள் இவள் என்பதாலோ என்னவோ கோதை எனப் பெயரிட்டு வளர்த்தார்.

பூக்காமலே மணக்கும் சிறப்புடையது துளசி. அதன் இலை, தண்டு, வேர் ஆகிய அனைத்தும் மணக்கும். மேலும் அது ஓர் அருமருந்தும் கூட. பரந்தாமனின் தோள்களைப் பூமாலையாக அலங்கரிப்பதிலும் பின் பிரசாதமாகத் தருவதிலும் துளசிக்கே முதன்மை இடம். அதே போல் கருவில் உருவாகாமல் அவதரித்தவள், அரங்கனை ஆலிங்கனம் செய்யப் போகிறாள் எனக் குறிப்பாக உணர்த்தவே தான் சாற்றிய பாமாலையை அரங்கனுக்குப் பணித்து பின் அடியார்க்கும் பாடும்படி அளித்தாள்.

தந்தை பெரியாழ்வார் தினந்தோறும் மாலை தொடுக்கும் போது மகளிடம் கண்ணனின் திருவிளையாடல்களை, திருப்புகழைக் கூறிக் கொண்டே இருந்ததால் அவளுக்குக் கண்ணன்பால் அளப்பரும் காதல் எழுந்தது. இது கண்ணனிடம் கொண்ட பக்தி, அன்பு, பரிவு, ஞானம், வைராக்கியம் ஆகியவற்றால் உண்டான காதல் பிரேமை எனலாம்.

இப்படிக் கோதை நாச்சியார் வளர்ந்ததைப் போலவே கண்ணன் பால் கொண்ட அவளது அன்பும் பிறைபோல் வளர்ந்தது.

ஒரு நாள் மாலையைத் தொடுத்து வைத்துவிட்டுத் தந்தை வெளியில் சென்ற நேரத்தில் அந்த மாலையை எடுத்துத் தன் கழுத்தில் சூடிக் கொண்டு ஆடி முன் நின்றாள். ஆடியில் தெரிந்த நிழற்பாவையைக் கண்டு ஆனந்தத்தில் ஆடினாள். ஆடிப்பாடி அந்த அரங்கனை மனதாரத் தொழுதாள். அவனது உருவம் கண்ணாடியில் தெரிந்தது போன்ற பிரேமை அடைந்து குதூகலித்தாள்.

தந்தையார் இல்லம் திரும்பியபோது அந்தக் காட்சியைக் கண்டு திடுக்கிட்டு, கன்னி சூடிய மாலையைக் கண்ணனுக்குச் சாற்றுவதா என மனம் வெதும்பினார். உடனே வேறு மாலையை விரைந்து தொடுத்து எடுத்துச் சென்று வடபத்ரசாயியிடம் சேர்ப்பித்தார். அதை ஏற்க மறுத்த ஆண்டவன் அந்தக் கோதை சூடிய மாலையையே தான் அணிய விரும்புவதாகக் கூறி அதையே கேட்டுப் பெற்று அணிந்து கொண்டான்.

அன்று முதல் அவள் சூடிக் கொடுத்த சுடர்க்கொடி ஆனாள். அவ்வைபவத்திற்கு இணையாகப் பல பாசுரங்கள் பாடிக் கொடுத்ததால் திருப்பாவையும் ஆனாள்.

இதனால் காதல் பிரேமை உச்சத்தைத் தொட்ட அளவில் மானுடருக்குப் பேச்சு படிகில்லேன் என்ற உறுதிமொழியுடன் அரங்கனுக்கே தன்னை வரித்துக் கொண்டாள்.

கருப்பூரம் நாறுமோ; கமலப்பூ நாறுமோ எனப் பாஞ்சசன்ய சங்கைப் பார்த்துப் பிரேமித்தாள். அரங்கனும் குதூகலித்தான்.

இந்த இருவரின் ரகசிய வைபவம் வெளிப்பட வேண்டிப் பரந்தாமன் பாண்டிய வல்லப தேவன் கனவிலே தோன்றி வில்லிபுத்தூர் சென்று பட்டர் மகளை அலங்கரித்துத் திருவரங்கம் அழைத்து வா எனக் கூறிட ஒரே இரவில் வழியெங்கும் தோரணம் அமைத்து வில்லிபுத்தூர் சென்றான் மன்னன். கனவில் கண்டதை எடுத்துச் சொல்லி நாச்சியாரை அலங்காரப் பல்லக்கிலே அமர வைத்து, திருவரங்கம் அழைத்துச் சென்றான். திருக்கோவில் முன்பு தான் அகத்தில் கண்ட கண்ணனைப் பள்ளி கொண்ட பெருமாளாகக் கண்டதும் கோதை அக்கணமே அரங்கனுடன் ஐக்கியமானாள். அரங்கனை ஆண்டதால் ஆண்டாள் ஆனாள்.

இதனை ஆன்மா இறைநிலைக்கு உயர்ந்து ஐக்கியம் ஆகும் என்ற வைணவத் தத்துவத்தை உணர்த்தும் நிலை எனலாம்.

இப்படியாக ஆண்டாள் அரங்கனொடு ஐக்கியமான ஆடி மாதத்தை அம்மனுக்கு உரிய புனித மாதமாகப் பெண்கள் வளைகாப்பு விழாவாக நடத்துவர். புதுப்புனல் பாய்ந்து வரும் காவிரித் தாயையும் கருத்தரித்த பெண்ணாகப் பாவித்து வளையல் வைத்துப் பூசை செய்வர். அம்மன் கோவில்களில் விளக்கு வழிபாடு செய்வர். புற இருளை நீக்கும் விளக்கொளி போல் அக இருளையும் நீக்கிட வேண்டுவர். இவ்வழிபாடு செய்திட ஆடிப்பூரமே உகந்த நாளாம்.

ஆயர்குல வேந்தன் ஆகத்தாள் தென் புதுவை வேயா வியந்த விளக்கு என ஆண்டாள் பாராட்டப்படுவதால் ஆடிப் பூரத்தைப் பாடிப்

பரவுவோமாக. அவள் தான் அணிந்து அரங்கனுக்கு அணிவித்த திருத்துழாயைப் பிரசாதமாக உட்கொண்டு கொரோனா என்னும் தீநுண்மிகள் தீண்டாமல் நலமாக வாழ ஆடிமுன் நின்ற ஆடிப்பாவையாம் ஆண்டாள் அரங்க மன்னர் திருவடி போற்றுவோமாக.

## திருவிளையாடற்புராணம்

### சங்கத்தார் கலகம் தீர்த்தது

தமிழ்ச் சங்கப் புலவர் நாற்பத்தெட்டுப் பேர்களும் அளப்பரிய புலமை பெற்றுவிட்டனர். புலமையின் காரணமாகப் பல்வேறு செந்தமிழ்ச் செய்யுட்கள் யாத்தனர். அதனால் ஒவ்வொருவரும் தம்மைத்தாமே பெரிதாக மதித்து, தமது புலமையிலேயே மகிழ்ச்சியுற்று, கருவம் அடைந்திருந்தார்கள். ஒருவருக்கொருவர் மாறுபாடு கொண்டனர்.

பின்னர் தமது பெருமைகளையும், சிறுமைகளையும் அளந்தறியவல்ல முதல் நூலாசிரியரான சோமசுந்தரப் பெருமானின் திருமுன்னர் சேர்ந்து வணங்கி, ஆலவாய் அண்ணலே! அடியார்களாகிய நாங்கள் யாத்த இந்தச் செய்யுட்களிலே நல்லதும் அல்லதும் சீர்தூக்கி அவற்றின் பெருமை சிறுமைகளை எடுத்துக்காட்டியருள வேண்டும், எமக்குள் தோன்றிய கர்வத்தைப் போக்கி ஐயத்தையும் நீக்கியருள வேண்டும், என்று கூறி விண்ணப்பம் செய்து கொண்டனர்.

வேதத்தின் ஆதியும் அந்தமுமாகி விளங்கும் சோமசுந்தரப் பெருமான் ஒரு புலவராய்த் தோன்றி வந்தருளினார், சங்கப்புலவர்களே! இத் திருநகரிலே தனபதி என்னும் வணிகன் ஒருவன் இருக்கின்றான். அவனுக்குக் குணசாலினி என்னும் மனைவி உண்டு; அவர்கள் இருவரும் செய்த நற்றவத்தின் பயனாகச் சிறந்த மகன் தோன்றியுள்ளான். அவன் முருகக் கடவுளின் திரு அவதாரம். அழகிலே சிறந்தவன், ஆனால் ஊமை, அவனிடம் சென்று நீங்கள் பாடிய கவிகளைச் சொல்லுங்கள். அவனது அறிவுக்குகந்த பாடல் எதுவோ அதுவே அனைவராலும் நன்கு மதிக்கப்படும் பாடல் ஆகும், என்று மொழிந்தருளினார்.

பெருமானே! ஊமையாக இருப்பதால் எங்களது செய்யுட்களை விரும்பிக்கேட்டு நல்லதும் அல்லதும் பகுத்தறிந்து தரம் குறையாமல் எவ்வாறு உரைப்பானோ? என்று தங்கள் ஐயப்பாட்டைக் கேட்டனர் புலவர்கள். வணிக குமாரனாகிய ஊமையன் தனக்குகந்த சொல்லழகும் பொருளாழமும் கேட்டால் தனது தலையை அசைத்து, தோள் புளகாங்கிதம் கொள்ள மகிழ்ச்சிகொள்வான். உங்களிடையே எழுந்த கலகமும் தீர்ந்துவிடும், என்று இயம்பி மறைந்தருளினார்.

சங்கப் புலவோர் அனைவரும் ஒன்று சேர்ந்து சென்று வணிகர்குல திலகமான உருத்திர சருமனை அன்போடு அழைத்து வந்தனர். தங்கள் சங்க மண்டபத்திலே அமர்த்தி வெண்மலர்களால் பூசித்து வணங்கினர். பின்னர் அவனது திருமுன்னர் கீழேயிருந்தவாறு தங்கள் செய்யுட்களைச் சொல்லிக் காட்டினர். உருத்திர சருமன் பாடல்கள் ஒவ்வொன்றையும் கேட்டான். சிலருடைய சொல்லழகு தெரிந்து மகிழ்ந்தான். சிலரது பாடல்களிலே குற்றம் கண்டு இகழ்ந்தான். அவ்வாறாகப் பலர் பாடல்கள் சென்று விட்டன. நக்கீரன், கபிலன், பரணன் என்னும் மூவருடைய பாடல்களைக் கேட்ட போது வணிகமணி உடல் பூரித்தான். உடல் மயிர் சிலிர்த்தான்; கண்ணீர் சொரிந்தான்; தலையசைத்துப் பேருவகை தெரிவித்தான்.

நவரத்தினங்களை எடை போடுபவன் போலவே அவ்வணிகர் சிறுவன் உருத்திர சருமன் சொல்லழகும் பொருளாழமும் தனது நுண்ணறிவென்னும் தராசினால் எடைபோட்டு அறிந்தான். அவன் சிறந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்த பின்னர் நன்னெறி தெரிந்து புலவர்கள் எல்லாரும் தம்முள் ஏற்பட்ட கலகத்தை ஒழித்து நட்புக் கொண்டனர்.

நக்கீரன், கபிலன், பரணன் என்ற முப்பெரும் புலவர்களின் பாடல்களும் நாட்டிலே நன்கு சிறந்தோங்கின.

பின்னர் தெய்வ அருள்பெற்ற செந்தமிழ் நாவலர்கள் குற்றமற்ற நூல்களை ஆராய்ந்து சிறப்போடு விளங்கினார்கள்.

*(தொடரும்...)*

## கம்பராமாயணம் (தொடர்ச்சி)

### கைகேயி

### (சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)

கம்பராமாயணத்தில் கம்பர் படைத்த மாதரசிகள் மூவர். கோசல நாட்டின் மன்னர் மன்னன் தசரத சக்கரவர்த்தியின் மனைவியர். சக்கரவர்த்தி மனைவியர் மூவரும் லட்சுமிகள். மூத்த மனைவி கௌசல்யா மகாலட்சுமி. இரண்டாவதான கைகேயி வீரலட்சுமி. மூன்றாவதான சுமித்திரை தைரிய லட்சுமி தியாக லட்சுமி. மூத்த அரசி கௌசல்யை கார்வண்ணன் ராமனைப் பெற்றெடுத்த பாக்கியவதி சக்கரவர்த்தியின்பால் அன்பைப் பொழிந்தாள். இரண்டாவதான கைகேயி தன்னுடைய வீரத்தினாலே தன்னுடைய சேவையினாலே சக்கரவர்த்தியின் மனதில் அன்பிற்குரியவளாக இடம் பெற்ற மாதரசி. மூன்றாவதான சுமித்திரை எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் தன் கடன் பணி செய்வதே என்று அமைதியாக வாழ்ந்த தேவதை; தான் பெற்ற இரு மக்களையும் மூத்தோர் இருவருக்கும் அற்பணிப்பு உணர்வோடு தொண்டு ஆற்றத் தூண்டிய தியாகவல்லி, புண்ணியவதி. இவ்வாறு மூவருமே தசரத சக்கவர்த்திக்குக் தக்க மனைவிகளாக இல்லத்தரசிகளாக வாழ்ந்த பேரரசிகள்.

தியாகத்தால் சுமித்திரை பாத்திரப் படைப்பை நாம் ஏற்கனவே பார்த்திருக்கிறோம். இப்பொழுது தசரத சக்கரவர்த்தியின் அன்பிற்குப் பாத்திரமான அன்னை கைகேயியைப் பற்றி கம்பனின் பாத்திரப் படைப்பைப் பார்க்க முயல்வோமாக!

மூவரும் மன்னன் மனதிற்கு மிகவும் துதிப்பவளாக கைகேயி தன் ஆசை மொழிகளாலோ அல்லது சல்லாபச் செயல்களாலோ பெறவில்லை. தன்னுடைய வீரத்தினாலும் வலிமையினாலும் தசரதற்குத் துணை நின்று பெற்ற வெகுமதி; இந்த நேசமும் பாசமும் அன்பு மட்டும் அடுத்தவர் மனத்தை ஆட்கொள்வதில்லை. வீரமும் அளவற்ற அன்பை நிலையான பாசத்தைப் பெற்றுத் தர முடியும் என்பதற்குக் கைகேயி பாத்திரப் படைப்பு ஓர் உதாரணம்.

சகராசரனுடன் நடந்த போரிலே தசரதனுக்குத் தேரோட்டியாகத் தன்னை நியமித்துக் கொண்டாள். அளவற்ற சேனைகள் கொண்ட பேரரசன் தசரதனுக்குத் தேரோட்ட, சாரதிகளுக்கு பஞ்சம் இருந்திருக்க வாய்ப்பில்லை. ஆனாலும் தன்னுடைய மன தைரியத்தினாலும், நம்பிக்கையாலும் தன்னைத் தேரோட்டியாக அமர்த்திக் கொண்டாள். ஒரு கட்டத்தில் தேரின் அச்சாணி

ஒடிந்து விழுந்துவிட, தேர் சாயாமல் நிற்பதற்கும் தசரதன் தொடர்ந்து போரிட்டு வெல்வதற்கும் துணை நின்ற வீரலட்சுமி ஆனாள் கைகேயி. இந்த நிகழ்ச்சியின் காரணமாகத் தசரதன் மனம் மகிழ்ந்து உன்னுடைய வீரச் செயலுக்குப் பரிசாக மூன்று வரங்கள் தருகிறேன் என்று உறுதி அளித்தார். கைகேயி தசரதனிடம் அதுசமயம் எந்த வரமும் கேட்டுப் பெறவில்லை. அவளுக்கு வரம் கேட்டுப் பெற வேண்டும் என்ற எண்ணமும் எழவில்லை. பிறகு தேவைப்பட்டால் கேட்டுப் பெற்றுக் கொள்கிறேன் என்று ஆசையற்ற நிலையிலே கணவன் அன்பே போதும் என்று இருந்தவள் கைகேயி.

பின்னர், புத்திர காமேஷ்டி யாகத்தால் மூவருக்கும் மக்கள் பிறந்த பின்னர் மூன்று அன்னைமார்களும் நான்கு குழந்தைகளையும் அவரவர் குழந்தைகள் போல் பாவித்தார்கள். அதிலும் கைகேயி தான் பெற்ற பரதனைவிட அதிக அன்பும் பாசமும் இராமன்பால் காட்டி, தான் பெற்ற குழந்தை போல் வளர்த்து வந்தாள். இராமபிரானும் பெற்ற அன்னையைவிட கைகேயியின்பால் பேரன்பும் பாசமும் கொண்டு வளர்ந்து வந்தார்.

தசரத சக்கரவர்த்தியின் ராஜமாதா மூவரில் இரண்டாவதான கைகேயி தன்னுடைய கணவர் தசரத சக்கரவர்த்தியின்பால் பேரன்பு பூண்டவள். அவருடைய காரியங்கள் யாவையும் கைகொடுத்து உதவியவள். வீரப்போர்க்களத்திலும் சக்கரவர்த்தியின் தேர்ச்சாரதியாகத் தேரோட்டி அவர் வெற்றிக்குத் துணை நின்றவள். இந்தக் கைகேயி கைகேய நாட்டின் மன்னர் மகளாகப் பிறந்து அரசர் இல்லத்திலே வளர்ந்து கல்வி கலை அனைத்தும் கற்க வேண்டிய முறைப்படி கற்று அத்துடன் போர்த்திறனும் போரில் அனைத்துத் துறைகளிலும் பங்கு கொள்ளும் வீரமும் பெற்று வீரத்திருமகளாக வளர்ந்தாள்.

மணப்பருவத்தில் கோசல நாட்டின் மன்னரான தசரத சக்கரவர்த்தியின் இரண்டாவது ராஜமாதாவாக மணம் புரிந்து வந்த பேரரசி; கம்பர் கைகேயின் மேன்மையான குணத்தைக் காட்டுவதற்கு

நாற்கடல் படுமணி நளினம் பூத்தது ஓர்
பாற்கடல் படுதிரைப் பவள வல்லியே
போற்கடைக் கண் அருளி – அருள் பொழியப் பொங்கு அணை
மேற்கிடந் தாள்தனை விரைவினெய்தினாள்.

என்ற பாடலைக் கூறுகிறார். பேதையர் மடந்தை தான் உறங்கும் காலத்தும் அவளுடைய திருமுகம் கருணையும் அருளும் பொழிய இளம் புன்னகையோடு

கண்ணயர்ந்தாள் என்று விளக்குகிறார். கைகேயி இயல்பாகவே பெருந்தன்மைக் குணமும் அன்பு அருள் கருணை உள்ளமும் கொண்ட மாதரசியாகத் தான் அரசர் இல்லத்தில் வாழ்ந்து வந்தாள்.

ஆனால் மந்தரை என்னும் கூனியின் கெடுமதியால் போக்கால் சூழ்ச்சித் திறனால் தன் இயல்பை மறந்து சுய குணத்தில் பிறழ்ந்து சக்கவர்த்தியை வற்புறுத்தி, தான் ஏற்கனவே பெற்ற மூன்று வரத்தைப் பெற்றாள். முதல் வரத்தின்படி பரதனுக்குக் கோசல நாடும் இரண்டாவது வரத்தின் படி ஸ்ரீ இராமர் 14 ஆண்டுகள் கானகம் சென்று தவம் இயற்ற வேண்டும் என்றும் வரங்களைப் பெற்றாள். இந்தச் செயல் தான் இராவணனுடைய அழிவிற்கு வித்திட்டது. எனவே கைகேயியின் மனத்திரிபு, மனமாற்றம் கதைப் போக்கிற்கு அச்சாணி போன்றது.

இராமனுக்குப் பட்டாபிஷேகம் எனக் கேள்விப்பட்ட மந்தரை கைகேயியின் அரண்மனைக்கு விரைந்து வந்து பார்த்தாள். கைகேயி மெல்லிய புன்னகையோடு பஞ்சணையில் உறங்கிக் கொண்டிருந்தாள். அதைப் பார்த்ததும் கூனிக்கு மகா கோபம் ஏற்பட்டு

பிணங்குவான் பேர்இடர் பிணிக்க நண்ணவும்
உணங்குவாய் அல்லைநீ! உறங்கு வாய்! என்றாள்.

பராவரும் புதல்வரைப் பயக்க யாவரும்
உராவரும் துயரைவிட்(டு) உறுதி காண்பரால்
விராவரும் புவிக்கெலாம் வேத மேஅன
இராமனைப் பயந்தவெற்(கு) இடர் உண்டோ? என்றாள்.

இவ்வாறு கோபமாகத் தட்டி எழுப்பினாள். அயர்ந்த உறக்கத்தில் இருந்த கைகேயி எழுந்த உடனேயே மந்தரை (கூனியைப்) பார்த்து என்னுடைய புதல்வர்கள் நால்வரும் தருமம் தவறாதவர்கள். நான் பெற்ற இராமனோ விரிந்த பூமிக்கெல்லாம் வேதம் என நன்னெறி காப்பவன். அப்படி இருக்க எனக்கு என்ன துயர் வரமுடியும் எனக் கேட்டாள்.

இப்பொழுது நன்மக்கள் நால்வரிலும் இராமன்பால் பேரன்பு கொண்டு இராமனைத் தான் பெற்ற மகனாகக் கருதி அன்பு செலுத்தி வந்த கைகேயி மனத்தைக் கொடூரக்கூனி சூழ்வினை கொண்டவளாக மாற்றினாள். அப்படி அதற்குக் கூனி கடைப்பிடித்த யூகங்களைக் கூனியின் பாத்திரப் படைப்பில் பார்ப்போம். தெள்ளிய பால் போல் இருந்த கைகேயியின் மனத்தைத் திரிந்த பாலாகக் கெடுத்தது கூனியின் செயலே. கைகேயி சந்தர்ப்ப வசத்தால் கூனி

உரைத்த குற்றம் நிறைந்த வார்த்தைகளால் தன் தாய் வீட்டிற்குக் கேடு வரலாம் என்று கற்பிதமான எண்ணத்தால் மனம் திரிந்து ஸ்ரீ இராமனைக் காட்டிற்கு அனுப்பிப் பெரும் பழி பூண்டாள்.

இராமனைக் காட்டிற்கு அனுப்பியதால் கைகேயி அடைந்ததெல்லாம் அவப்பெயரும் தனிமைப்படுத்தப்பட்ட அவல நிலையும் மட்டுமே. குகன் பரதனைக் கண்டு ஆயிரம் இராமர் உனக்கு ஈடாவாரோ என்று வியந்து நின்ற நிலையில் மூத்த ராஜமாதா கௌசல்யாவை உலகம் போற்றும்.

ஆயிரம் இராமர் நின் கேள்ஆவரோ தெரியின் அம்மா. கௌசல்யாவிடம்
கோக்கள் வைகும் முற்றத்தான் முதல்தேவி மூன்றுலகம் ஈன்றானை
பெற்றத் தால் பெறும் செல்வ யான்பிறத்தலால் துறந்த பெரியாள் என்றான்.

என்று அறிமுகப் படுத்திய பரதன் சுமித்திரையைக் காட்டி

இறந்தான்தான் இளம்தேவி யாவர்க்கும் தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தனைப் பயந்த பெரியாள்

என்று அறிமுகம் செய்தவன்.

படர்எலாம் படைத்தாளைப் பழிவளர்க்கும் செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும் உயிர்ப்பாரம் குறைந்து தேய
உடர்எலாம் உயிர்இலா எனத்தோன்றும் உலகத்தே ஒடுங்கி அன்றே
இடர்இலா முகத்தாளை அறிந்திலையேல் இந்நின்றான் என்னை ஈன்றாள்.

கைகேயி என்னை ஈன்றாள் என்று அறிமுகப்படுத்தப்படும் அவலநிலை தான் கைகேயி பெற்ற பெரிசு. இந்தக் கங்கைகாண் படலத்திற்குப் பின்னே கைகேயியைப் பற்றி எந்த இடத்திலேயும் குறிப்பிட்டுப் பேசவில்லை.

இப்படிக் கருணை உள்ளமும் தாயன்பும் பெருந்தன்மையும் கொண்ட கைகேயி கூனியின் சூழ்வினைத் திறத்தாலே யாவராலும் இகழப்படுகின்ற பாத்திரமாக மாறி அவமானப்பட்டாள்.

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்